2nd March 1961]

**Sri V. SUBBIAH :** ப்ரகாசம் அரசாங்க காலத்தில் சோள உற்பத்திக்கு ஏக்கருக்கு பதினைந்து ரூபாய் உற்பத்தியாளர்களுக்குக் கொடுக்கப்பட்டது. ஏனென்றால் அதன் உற்பத்திச் செலவு ஏக்கர் ஒன்றுக்கு 150 ரூபாயாகிறது. ஆகவே அதைக் குறைந்த விலையில் உற்பத்தி செய்வதற்கு ப்ரகாசம் அரசாங்க காலத்தில் கொடுத்தது போன்று இந்த அரசாங்கம் கொடுக்க ஏதாகிலும் உத்தேசம் உண்டா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** நான் முன்பு அறிவித்தது போன்று இப்பொழுதுள்ள நிலைமையில் அரசாங்கம் அவ்வப்போதுள்ள விலைவாசியை பரிசிலனை செய்து வருகிறது. ஆகவே இப்பொழுதுள்ள நிலைமையில் அரசாங்கம் எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்வதாக இல்லை.

**Sri S. RAMASAMI NAIDU :** விவசாயப் பொருள்கள் விலை இப்பொழுது குறைந்து இருக்கிறது என்பது அல்ல என்ற பிரச்னை தனியாக இருக்கிறது. அந்த நிலைமையில் இன்றைக்கு இருக்கக் கூடிய நிலையில் இப்பொழுது விற்கக்கூடிய விலையானது அவர்களுடைய கூலி செலவு முதலியவைகளுக்குக் கட்டுபடியாகவில்லை என்பதை சர்க்கார் பரிசிலனை செய்யுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** முன்பு இருந்த விலைக்கு இப்பொழுது குறைந்திருக்கிறது என்பது வாஸ்தவம் தான். ஆனால் இப்பொழுது விற்கக்கூடிய விலையானது விவசாயிகளுக்குக் கட்டுபடியாகக்கூடியதாக இல்லை என்று சொல்வதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது.

*Prohibition*

* 510 *Q.*—**Sri N. R. THIAGARAJAN :** கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

*1960-ல் சென்னை சினிமா ஸ்டுடியோக்களில் இதுவரை எத்தனை தடவை மதுவிலக்கு சோதனை நடந்தன ?*

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** No raids were conducted in the Cinema Studios in Madras City in 1960.

*Soil conservation*

* 511 *Q.*—**Sri A. VEDARATHNAM :** கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம் மாநிலத்தில் மண் வளத்தைப் பாதுகாக்க அரசாங்கம் ஏதாவது புதிய திட்டம் வகுத்திருக்கிறதா ? அப்படியானால் அதன் விவரமென்ன ?

(இ) இதன் மூலம் அரசாங்கம் செய்ய உத்தேசித்துள்ள உதவி என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** and (*b*) A statement [a] is placed in the table of the House.

[a] Printed as Appendix I on pages 84–85 infra.

[2nd March 1961

SRI A. VEDARATHNAM : இந்தத் திட்டத்தை ஒவ்வொரு ஜில்லாவிற்கும் விஸ்தரிக்கும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா? மேஜையின் மீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையின்படி அதற்கு என்று ஒதுக்கிய தொகையில் 66 லட்சம் ரூபாய் மாத்திரம் செலவு செய்திருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறது. மண் வளத்தை பயன்படுத்தக்கூடிய அளவில் செலவு செய்யப்படவில்லை என்றும் பாக்கிப் பணம் லாப்ஸ் ஆகக்கூடியதாக இருக்கிறது என்றும் தெரிய வருகிறது. அப்படி லாப்ஸ் ஆக விடாமல் அடுத்த வருஷக் கணக்கிற்கு அதைக் கொண்டு வரவேண்டுமென்ற கணக்கு விவரங்கள் இருக்கின்றனவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பணம் லாப்ஸ் ஆகும் என்பது இல்லை. சில இடங்களில் இன்னும் வேலை செய்ய வேண்டியதாக இருக்கிறது. மண் வளத்தை அதிகப்படுத்த வேண்டும் என்று சொல்லப்படுகிற இடங்களில் அது செலவு செய்யப்படும். அப்பொழுது ஒதுக்கப்பட்ட பணம்பூராவும் செலவு செய்யப்படும். புதிய இடங்களிலும் இந்தத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமென்ற திட்டத்தை ஒட்டி இந்த மன்றத்தில் ஒரு சட்டத்தைக்கூட நிறைவேற்றியிருக்கிறோம். அதனால் அடுத்த ஆண்டில் இன்னும் தீவிரமாக இதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். அதன் பிறகு இன்னும் தீவிரமாக வேலை செய்ய ஒவ்வொரு ஜில்லாவிலும் இந்தத் திட்டத்தை அமைத்து அதை நிறைவேற்ற வேண்டும் என்று அரசாங்கம் நம்புகிறது.

SRI S. M. ANNAMALAI : மண் வளத்தை பாதுகாக்கும் காண்டூர் பண்டிங் செய்யக்கூடிய இடங்களில் அதற்கு என்று ஏற்படுத்தப்படுகிற ஸ்டாப்களுக்கு என்று பணம் வசூலிக்கிறார்கள். இந்த ஸ்டாப் சார்ஜையும் அவர்களிடமிருந்து வசூலிக்கிறார்களே அப்படி இல்லாமல் அப்படி ஸ்டாப் சார்ஜ் என்று வசூலிப்பதை குறைந்த அளவில் வசூலிக்க அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா ? அப்படி வசூலித்தால் இந்த காண்டூர் பண்டிங் வேலை இன்னும் நல்ல முறையில் நிறைவேற்றப்படும் அல்லவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்டாப் சார்ஜ் என்று இருப்பதில் நூறுக்கு 12½ சத விகிதம் சப்சிடி மானியமாகக் கொடுக்கப்பட்டு வருகிறது. பாக்கி 75 சத விகிதத்தை விவசாயிகளிடமிருந்து பல தவணைகளில் வசூலிக்கப்படுகிறது. அதோடு கூட விவசாயிகள் இந்தத் திட்டத்தை அவர்களாகவே நிறைவேற்ற முன் வந்தால் அவர்களுக்குக் கொஞ்சம் அதில் மிச்சம் ஏற்படுகிறது. அதிக செலவும் ஏற்படாது.

SRI M. A. B. ARUMUGHASAMY: மதுரை ஜில்லாவில் இந்த திட்டம் நல்ல பலனை கொடுத்திருக்கிறது என்பதை சர்க்கார் அறிவார்களா ? அங்கு ஒதுக்கப்பட்ட பணம் பூராவும் செலவு செய்யப்படாமல் இருப்பதற்குக் காரணம் அதற்கு போதிய சிப்பந்திகளை

2nd March 1961]

நியமிக்காமல் இருப்பதுதான் காரணம் என்று அறிகிறதா? அதனுல் திட்டம் சரிவர நிறைவேற்றப்படாமல் இருக்கிறது என்பது உண்மையா. ஆகவே இனிமேலாவது திட்டம் பூராவும் நிறைவேற்றப்படுவதற்கு போதிய சிப்பந்திகளை நியமித்து திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த திட்டத்தை நிறைவேற்ற விவசாயிகளே முன் வந்தால் நல்ல பலனை அளிக்கிறது என்று நான் முன்னமேயே பதிலளித்திருக்கிறேன். விவசாயிகளே இந்த திட்டத்தை எடுத்து இன்னும் தீவிரமாக வேலை செய்தால் இந்த திட்டத்தை இன்னும் நல்ல முறையில் நிறை வேற்ற முடியும். அதனுல் செலவும் குறையும், சிக்கனமாகவும் திட்டத்தை முடித்துவிடலாம்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : மண் வள திட்டத்தை அரசாங்கம் எடுத்து நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறுர்கள். இந்த நிலைமையில் ஆத்தூர் போன்ற இடங்களில் மண் வளம் இல்லாத காரணத்தால் அங்குள்ள விவசாயிகள் நிலத்தை சரிவர பயிரிடாமல் தரிசாகப் போட்டு வைத்திருக்கிறுர் கள். உணவு பஞ்சம் ஏற்படக்கூடிய காலத்தில் கூட அவர்கள் பயிரிடுவதாக இல்லை. ஆகவே அப்படிப்பட்ட இடங்களில் மண் வளத்தை ஏற்படுத்தி விவசாயம் செய்து வருவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆத்தூரில் மண் வளம் இல்லை என்று சொல்வது சரியல்ல. அங்கு விவசாயிகள் ஓரளவு விவசாயம் செய்து கொண்டு தான் வருகிறுர்கள். அங்குள்ளவர்களுக்கும் அரசாங்கம் பணம் கொடுத்து உதவி வருகிறது. அங்குள்ள விவசாயிகளால் மேலும் பயிர் செய்வதற்கு மேலும் கவனம் செலுத்தப்பட்டு தான் வருகிறது.

SRI T. S. RAMAMIRTHA THONDAIMAN : தஞ்சை ஜில்லா வில் மண் வள பாதுகாப்பிற்கு வேண்டிய கவனம் செலுத்தப்பட்டு வருகிறதா? அப்படி இருந்தால் அதை விரிவான முறையில் அமுல் நடத்துவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுமா? இல்லையானுல் அங்குள்ள மண் வளத்தை நல்ல முறையில் பாது காக்க முயற்சிக்கப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தின ருக்கு நான் சொல்லுகிறேன், சாதாரணமாக மண் வள பாது காப்புத் திட்டம் புஞ்சை நிலங்களில் தான் அதிகமாக எடுத்து நிறைவேற்றப்படும். தஞ்சை போன்ற டெல்டாயிக் பிரதேசங் களில் அதை நிறைவேற்றுவதற்கு இடம் இல்லை.

SRI K. VINAYAKAM : Sir, my question No. 512 may be taken up tomorrow.

[2nd March 1961

MR. SPEAKER : If the Hon. Minister has no objection, I have no objection.

THE HON. SRI R. VENKATARAMAN : I have no objection.

MR. SPEAKER : Question No. 152 will be taken up tomorrow.

*Bridge (Thiparappu)*

* 513 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Works be pleased to state whether there is any proposal to include the construction of the Thiparappu Bridge in Thiparappu Panchayat area in the Kanyakumari district in the Third Five-Year Plan?

THE HON. SRI P. KAKKAN : The Member refers to the Kalial bridge at mile 29 of the Kovilur-Kulasekaram road. The Government have already sanctioned the reconstruction of the Kalial bridge under the Second Five-Year Plan. The work of reconstructing the bridge will be commenced in February 1961.

SRI T. T. DANIEL : May I know, Sir, the total estimated cost for the construction of this bridge?

THE HON. SRI P. KAKKAN : The detailed estimate is Rs. 3.30 lakhs.

*Loans*

* 514 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Works be pleased to state with reference to the Question No. 156 answered on 18th August 1960—

(*a*) the total amount of loans granted to persons belonging to Backward Classes for starting saloons, laundries and tailoring shops in 1960;

(*b*) the number of persons benefited; and

(*c*) the terms on which such loans have been granted?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) The scheme is being implemented during the current year in Salem district only. The selection of beneficiaries, etc., is nearing completion. It is proposed to grant loans to about 150 persons, i.e., for about 50 persons in each of the occupations of hair-dressing, laundrying and tailoring during 1960–61 in the above district.

(*c*) The rules for the grant of loans for the above occupations are under consideration of the Government.

**SRI A. GOVINDASAMI :** சேலம் மாவட்டத்தில் புதியதாக எடுத்துக்கொள்ளப்பட்டு வரும் இந்த திட்டத்தை மற்ற மாவட்டங்களுக்கும் விஸ்தரிக்கக்கூடிய திட்டம் இந்த அரசாங்கத்தினிடம் இப்பொழுது இருக்கிறதா ? எந்த ஆட்களை எந்த பிரிவினையைக்கொண்டு பொறுக்கப்பட்டு, அந்தச் சலுகை கொடுக்க நிர்ணயிக்கப்படுகிறது ?